உ

# श्रीहनुमत्स्तुतिमञ्जरी

# ஸ்ரீ ஹநுமத்ஸ்துதிமஞ்ஜரீ

स्तुति - नामावली - कवच - मन्त्रप्रयोग - पूजाक्रमादिसमुच्चयः



உ

श्रीगुरुभ्यो नमः

# श्रीहनुमत्स्तुतिमञ्जरी

स्तुति - नामावली - कवच -

मन्त्रप्रयोग - पूजाक्रमादिसमुच्चयः

# ஸ்ரீ ஹநுமத்ஸ்துதிமஞ்ஜரீ

ஸ்தோத்திரம், நாமாவளி, கவசம்,

மந்த்ர பிரயோகம்

பூஜை முறை முதலியவற்றின் தொகுப்பு

தொகுப்பாளர் :

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ,

ஸ்ரீரங்கம்

வெளியிடுவோர் :

**MAHAPERIYVAL TRUST**

94, Gurukrupa, I.T.I. Layout

Bangalore-54

2010

**SRI HANUMAT STUTI MANJARI**

Stotras, Namavali, Kavachas, Mantras, etc., on Sri Hanuman.

First Edition ; 2010

Compiled by
Brahma Vidya Ratna, Rashtrapati Sammanita
Vaidya S.V. Radhakrishna Sastri,
Srirangam

Copies available at :
Kuppuswamy Research Institute
Royapettah High Road,
Mylapore, Chennai-600 004
(Inside Mylapore Sanskrit College)

Published by :
Sri Mahaperiyaval Trust
Gurukripa, 94, I.T.I. Layout,
M.S.R.I.T. Nagar
Bangalore - 560 054

Lasertypeset & Printed at :
V.K.N. ENTERPRISES
164, R.H. Road, Mylapore, Chennai-4
Cell : 9840217036

# ஸ்ரீ ஹநுமான்

ஸ்ரீ மஹாபெரியவாள் டிரஸ்டின் மூலம் வெளியிடப் பெற்ற **ஸ்ரீ விஷ்ணு ஸ்துதிமஞ்ஜரியில் ஸ்ரீ ஹநுமானைப்** பற்றிய பகுதி சிறிதளவே வெளியிட நேர்ந்தது. பாரத நாட்டின் பல்வேறு பகுதிகளில் முக்யமாக கர்நாடகத்திலும் மஹாராஷ்ட்ரத்திலும் தமிழ் நாட்டிலும் ஹநுமானின் வழிபாடு, ஒவ்வொரு க்ராமத்திலும் நகரத்திலும் ஒவ்வொரு தெருவிலும் சிறு சிறு கோவில்களில் தனித்தும் வைஷ்ணவ திருக்கோவில்களில் சிறப்புடனும் நடைபெறுகிறது. பாரதீயப் பண்பாட்டிற்குக்குந்தகம் விளைவித்த வெளிநாட்டு வேறு மதத்தினர் வழிபாட்டிடங்களை உருக் குலைக்க முற்பட்ட போது ஸமர்த்த ராமதாஸர் முதலிய மஹான்கள் ஹனுமானை மக்கள் முன்னே நிறுத்தி எளியவரும் அவரை வழிபட வழி வகுத்து நிலைமையைக் கட்டுக்குள் கொணர்ந்தனர்.

துவைத வேதாந்த குரு பரம்பரையினர் பகவான் வாயு, ஹனுமான், பாண்டவர்களின் பீமன், மத்வர் என நால்வரும் ஒரே துவைத ஒளி எனப் போதித்ததால் மாத்வர் வழிபாட்டில் ஹனுமான் முக்ய இடம் பெறுகிறார். சிறு சிறு கிராமங்களனைத்திலும் கூட பிள்ளையாருக்கு உறு துணையாக ஹனுமானும் இறைவழிபாட்டில் முக்ய இடம் பெறுகின்றார்.

ஹனுமானைப் பற்றித் தொகுக்க முற்பட்டதும் கன்னட எழுத்தில் வெளியாகியுள்ள எண்ணற்ற துதிகள் முதலியவைகிட்டின. ஹனுமானின் மந்த்ர வழிபாட்டு முறை இப்பகுதிகளில் அதிகம். பல நரஸிம்ஹ க்ஷேத்ரங்களில் ஆஞ்சநேயருக்கு முக்ய இடம் உண்டு. நாமக்கல், கடிகாசலம் முதலியவை குறிப்பிடத்தக்கவை. நாராயணனைப் போன்று இவரும் சங்கசக்ர தாரியாகக் கட்சி தருமிடம் அதிகம்.

இவரே அனைத்து இறைவடிவினருமாவார் என்ற நம்பிக்கை உண்டு. ருத்ரர், வாயு, வராஹர், ஹயக்ரீவர் முதலிய பல தேவர்களின் வடிவினராக இவரைக் காண்பதுண்டு. பஞ்சமுகர், ஸப்தமுகர், ஏகாதசமுகர் என்ற வடிவங்கள் குறிப்பிடத் தக்கவை. எட்டு திக்குகளிலும் வானிலும் அடியிலும் இடையிலும் உள்ளவராகத் த்யானிப்பர். ராமனுக்கு வால்மீகி ஹனுமானின் ஸஹஸ்ரநாம ஸ்துதியை உபதேசித்ததாக வரலாறு உண்டு. விபீஷணர் இவருடைய சிறந்த பக்தர். ராமருடன் ஸுக்ரீவனும் விபீஷணனும் இணைந்ததில் ஹனுமானின் பங்கு மிகப் பெரிதும் சிறந்ததும் உரிய நேரத்தில் வெளிப்பட்டதுமாகும்.

இந்நூலில் முதலில் பக்தரனைவரும் எளிதில் நினைவிற் கொண்டு பாடுகிற ஸ்துதிகள் இடம் பெறுகின்றன. அவற்றை எளிதில் உணருமாறு தமிழ் உரை உள்ளது. வாயு - கேஸரி - அஞ்சனை இவர்களின் புதல்வராக, ஸுக்ரீவனின் நண்பராக, ஸ்ரீ ராம லக்ஷ்மணர்களைத் தோளில் சுமப்பவராக, ஸீதையிடம் செய்தி கொண்டு சேர்க்கிற தூதுவராக, போரில் உதவுபவராக, வால்மீகி அறிமுகப்படுத்துகிறார். இதிலுள்ள துதிகளோ பரம் பொருளாகவே அவரைக் காட்டுகின்றன. எளிய மக்களுக்கு உதவ அந்தப் பேராண்மையும் பேரறிவும் பெற்ற பரம் பொருள் மனிதனைவிட எளியவானரராகத் தோன்றி பரம்பொருள் ஆற்றுகிற இறைப் பணிகளை எளிதில் செய்து எளியவனுக்கும் உதவுகிறது என்பதே துதிகளின் தாத்பர்யம்.

ஹனுமான் காப்பு தெய்வம். மனிதனுக்குப் பல இன்னல்கள் மனித முயற்சியால் தீராதவை. அவற்றிலிருந்து விடுவிக்க, நினைத்த கணத்தில் ஹனுமான் அங்கு தோன்றி உரிய முறையில் உதவுகிறார் என்பதே ஸமர்த்த ராமதாஸ ஸ்வாமியிலிருந்து பாமரன்வரை

கண்டறிந்த உண்மை. இதனை இந்நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் காணலாம்.

கவச ஸ்துதிகள், மந்த்ர யந்த்ர தந்த்ர முறைகள் தக்க வழி காட்டுகிற குருவரர்களிடம் உபதேசம் பெற்றே கடைபிடிக்கத் தக்கவை. அக்ஷரப் பிசகு, உச்சரிப்புப் பிசகு கேடுவிளைவிக்கக் கூடும். நமது அறியாமையை நன்கு உணர்ந்த ஹனுமான் இவற்றைப் பொருட்படுத்த மாட்டார். எனினும் நல்ல வழி காட்டியின் துணை கொண்டு உரிய முறையில் இறைவனை வழிபடுவோமாக.

ஸ்ரீ மஹாபெரியவாள் டிரஸ்டின் முக்கியக் குறிக்கோள்-நாட்டின் பல பகுதிகளிலும் நேற்றுவரை பழக்கப்பட்டிருந்த நல்வழிகள் இன்று புலப்படாதவாறு மறைகின்றன. அவற்றை மறுபடி முன் நிறுத்தி அப்பழக்கங்களை வழக்கிலிருந்து மறையாதபடி பாதுகாக்க, நேற்றுவரை நம்முன்னோர் மூல நூலாகக் கொண்டிருந்தவற்றை முடிந்தவரை பாதுகாத்து அடுத்த தலைமுறையிடம் ஒப்படைப்பதாகும்.

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடத்து ஸ்ரீசங்கராசார்ய ஸ்ரீ மஹாபெரியவாளின் அருளாசியுடன் துவங்கப்பட்ட இப்பணி, இன்றைய பீடாதிபதிகளான ஸ்ரீ சரணர்களின் பேரருளால் சிறப்பாக நிறைவுறுகிறது. நூல் பிரசுரிக்கத் தொடங்கிய போது இருந்த மலைப்பு சிறிது சிறிதாக மறைந்து பக்கம் பக்கமாக எழுதி உருவாகக் கைகளிலும் எழுது கோலிலும் துடிப்புடன் செயல்பட ஸ்ரீ சரணர்களின் அருள் தோன்றாத் துணையாகக் கூட நிற்கிறது.

அவர்களது திருவடிகளில் இதனை ஸாஷ்டாங்க நமஸ்காரங்களுடன் ஸமர்ப்பிக்கிறோம்.

இப்பணியில் உதவியர் பலர். அனைவருக்கும் இறையருளும் குருவருளும் கூடி நலம் தரவேண்டுகிறோம்.

# श्री हनुमत्स्तुतिमञ्जरी

## विषयानुक्रमणिका

पृष्ठसंख्या

உ

# பொருளடக்கம்

## ஸ்ரீ ஹனுமானைப் பற்றியவை

பக்க எண்

★ ★ ★

श्री सीतारामाभ्यां नमः ।

श्रीमदाञ्जनेयाय नमः

# श्रीहनुमत्स्तुतिमञ्जरी

# ஸ்ரீ ஹநுமத் ஸ்துதிமஞ்ஜரீ

## श्रीमदाञ्जनेय सुप्रभातम्

## ஸ்ரீமத் ஆஞ்ஜநேய ஸுப்ரபாதம்

अमलकनकवर्णं प्रज्वलत्पावकाक्षं
सरसिजनिभवक्त्रं सर्वदा सुप्रसन्नम् ।
रणरचनसुगात्रं कुण्डलालङ्कृताङ्गं
परजयकरवालं रामदूतं नमामि ॥

*மாசற்ற தங்கநிறமுள்ளவர், நன்கு எரிகிற தீபோன்ற கண்கள் உள்ளவர், தாமரைபோன்ற முகமுள்ளவர், எப்போதும் தெளிவுடனுள்ளவர், போரிடமுனைந்த மேனியர், குண்டலங்களால் அழகானவர், பிறரை வெல்கிற வாள் கொண்டவர், அந்த ராமதூதரை வணங்குகிறேன்.*

श्रीरामचन्द्रचरणाम्बुजमत्तभृङ्ग
श्रीराममन्त्रजपशील भवाब्धिपोत ।
श्रीजानकीहृदयतापनिवारमूर्ते
श्रीवीर धीर हनुमन् तव सुप्रभातम् ॥ १

*ஸ்ரீராம சந்திரனின் திருவடித் தாமரையைச் சுற்றி வருகிற மதர்த்த வண்டே ! ஸ்ரீராமனின் மந்த்ர ஜபத்தை வழக்கமாகக் கொண்டவரே ! பிறவிக் கடலைக் கடக்கச் செய்கிற ஓடமானவரே! ஸ்ரீ ஜானகியின் உள்ளத்துத் தாபத்தைப் போக்குபவரே ! வீரரே ! தீரரே ! ஹநுமானே ! உமக்கு நற் காலையாகட்டும். (1)*

श्रीरामदिव्यचरितामृतस्वादलोल
श्रीरामकिङ्कर गुणाकर दीनबन्धो ।
श्रीरामभक्त जगदेकमहोग्रशौर्य
श्रीवीर धीर हनुमन् तव सुप्रभातम् ॥ २

*ஸ்ரீராமனின் வரலாறாகிற அமுதத்தைப் பருகுவதில் ஆர்வம் கொண்டவரே! ஸ்ரீராமனின் பணிகளைச் செய்பவரே! குணச் சிறப்புகளின் இருப்பிடமே! எளியவரின் உறவினரே! ஸ்ரீராமனின் பக்தரே! உலகில் ஒரே பெரும் - கடும் சூரத் தன்மை கொண்டவரே! உமக்கு நற்காலை ஆகுக! (2)*

सुग्रीवमित्र कपिशेखर पुण्यमूर्ते
सुग्रीवराघवसमागमदिव्यकीर्ते ।
सुग्रीवमन्त्रिवर शूरकुलाग्रगण्य
श्रीवीर धीर हनुमन् तव सुप्रभातम् ॥ ३

*ஸுக்ரீவனின் நண்பரே! வானரரில் சிறந்தவரே! புனித வடிவினரே! ஸுக்ரீவனும், ராமனும் இணையச் செய்த புனிதப் புகழ் கொண்டவரே! ஸுக்ரீவனின் சிறந்த மந்திரியே! சூரரின் குலத்தின் முதலில் உள்ளவராக மதிக்கப்படுபவரே! வீரரே! தீரரே! ஹநுமானே! உமக்கு நற்காலை ஆகுக! (3)*

भक्तार्तिभञ्जन दयाकर योगिवन्द्य
श्रीकेसरीप्रियतनूज सुवर्णदेह ।
श्रीभास्करात्मजमनोऽम्बुजचञ्चरीक
श्रीवीर धीर हनुमन् तव सुप्रभातम् ॥ ४

*பக்தரின் துயரை முறிப்பவரே! பரிவு காட்டுபவரே! யோகிகளால் வணங்கத் தக்கவரே! ஸ்ரீ கேஸரியின் அன்புப் புதல்வரே! தங்க மேனியரே! ஸ்ரீ ஸூரியனின் புதல்வரான ஸுக்ரீவனின் மனமான தாமரை மீது வண்டாக மொய்ப்பவரே! வீரரே! தீரரே! ஹனுமானே! உமக்கு நற்காலையாகுக! (4)*

श्रीमारुतप्रियतनूज महाबलाढ्य
मैनाकवन्दितपदाम्बुज दण्डितारिन्।
श्री उष्ट्रवाहन सुलक्षणलक्षिताङ्ग
श्रीवीर धीर हनुमन् तव सुप्रभातम्॥ ५

*ஸ்ரீ வாயுவின் இனிய புதல்வரே ! பெரு வலிவு கொண்டவரே! மைநாகமலையால் திருவடிகளில் வணங்கப் பெற்றவரே ! எதிரியைத் தண்டித்தவரே ! ஒட்டகையை வாகனமாகக் கொண்டவரே ! நல்ல லக்ஷணங்கள் பொருந்திய வடிவினரே ! வீரரே ! தீரரே ! ஹனுமானே ! உமக்கு நற்காலை. (5)*

पञ्चानना(न)स्य भवभीतिहरस्य राम-
पादाब्जसेवनपरस्य परात्परस्य।
श्री अञ्जनाप्रियसुतस्य सुविग्रहस्य
श्रीवीर धीर हनुमन् तव सुप्रभातम्॥ ६

*சிங்க(ஐந்து)முகம் கொண்டவரே ! வீரரே ! தீரரே ! ஹனுமானே ! பிறவித் துயரை நீக்குபவரும், ஸ்ரீராமனின் திருவடித் தாமரையை வழிபடுவதில் முனைந்தவரும் மேலானவருக்கும் மேலானவரும், அஞ்சனையின் அன்புக்குரிய புதல்வரும் அழகிய மேனியருமான உமக்கு நற்காலை. (6)*

गन्धर्वयक्षभुजगाधिपकिन्नराश्च
आदित्यविश्ववसुरुद्रसुरर्षिसङ्घाः।
सङ्कीर्तयन्ति तव दिव्यसुनामपङ्क्तिम्
श्रीवीर धीर हनुमन् तव सुप्रभातम्॥ ७

*உமது திருநாமங்களின் வரிசையை கந்தர்வரும், யக்ஷரும், நாகரும், கின்னரர்களும், ஸூர்யனும், விச்வாவஸுவும், ருத்ரர்களும், தேவர்களும் பாடுகின்றனர். வீரரே ! தீரரே ! ஹனுமானே ! உமக்கு நற்காலையாகுக ! (7)*

श्रीगौतमीच्यवनतुम्बुरुनारदात्रि-
मैत्रेयव्यासजनकादिमहर्षिसङ्घाः ।
गायन्ति हर्षभरितास्तव दिव्यकीर्तिं
श्रीवीर धीर हनुमन् तव सुप्रभातम् ॥ ८

*அஹல்யை, சியவனர், தும்புரு, நாரதர், அத்ரி, மைத்ரேயர், வ்யாஸர், ஜனகர் முதலான மஹர்ஷிக் கூட்டங்கள் மகிழ்ச்சி நிறைந்த உள்ளத்தினராக உம் திருப்புகழைப்பாடுகின்றனர். வீரரே ! தீரரே ! ஹனுமானே ! உமக்கு நற்காலையாகுக ! (8)*

भृङ्गावली च मकरन्दरसं पिबेद्यं
कूजन्त्युदारमधुरं चरणायुधाश्च ।
देवालये घनगभीरसुशङ्खघोषः
श्रीवीर धीर हनुमन् तव सुप्रभातम् ॥ ९

*வண்டுகள் பூவின் மகரந்தத்தைப் பருகி ரீங்காரமிடுகின்றன. கோழிகளும் இனிது கூவுகின்றன. உம் தேவாலயத்தில் கனத்த ஆழ்ந்த சங்கொலிகள் வெளிப்படுகின்றன. வீரரே ! தீரரே! ஹநுமானே ! உமக்கு நற்காலையாகுக ! (9)*

पम्पासरोवरसुपुण्यपवित्रतीर्थ-
मादाय हेमकलशैश्च महर्षिसङ्घाः ।
तिष्ठन्ति त्वच्चरणपङ्कजसेवनार्थं
श्रीवीर धीर हनुमन् तव सुप्रभातम् ॥ १०

*மஹர்ஷிகள் உம் திருவடித் தாமரையை வழிபட பம்பா ஸரஸின் புனித நீரைத் தங்கக் கலசத்தில் ஏந்தி நிற்கின்றனர். வீரரே ! தீரரே ! ஹனுமானே உமக்கு நற்காலையாகுக ! (10)*

श्रीसूर्यपुत्रप्रिय नाथ मनोज्ञमूर्ते
वातात्मजात कपिवीर सुपिङ्गलाक्ष।
सञ्जीवनाय रघुवीरसुभक्तवर्य
श्रीवीर धीर हनुमन् तव सुप्रभातम्॥ ११

*ஸூர்யனின் மகனான ஸுக்ரீவனின் இனிய துணைவரே! மனம் கவர்கிற மேனியரே! வாயுவின் புதல்வரே! வானர வீரரே! சிவந்த கண்களுள்ளவரே! ரகுவீரரின் புனித சிறந்த பக்தரே! வீரரே! தீரரே! ஹனுமானே! எம்மை வாழ்விக்க உமக்கு நற்காலையாகுக. (11)*

—★—

# श्रीहनुमद्वन्दनम्

## ஸ்ரீ ஹனுமத் வந்தனம்

अञ्जनानन्दनं वीरं जानकीशोकनाशनम्।
कपीशमक्षहन्तारं वन्दे लङ्काभयंकरम्॥ १

*அஞ்சனையை மகிழ்விப்பவர், வீரர், ஜானகியின் துயரை அகற்றியவர், வானரரின் தலைவர், அக்ஷனை மாய்த்தவர், லங்கையை அச்சுறுத்தியவர். அவரை வணங்குகிறேன். (1)*

अञ्जनीगर्भसम्भूत कपीन्द्रसचिवोत्तम।
रामप्रिय नमस्तुभ्यं हनूमन् रक्ष सर्वदा॥ २

*அஞ்ஜனியின் கருவறையில் தோன்றியவரே! வானர அரசன் ஸுக்ரீவனின் சிறந்த மந்திரியே! ராமனிடம் அன்பு கொண்டவரே! அனுமானே! உமக்கு வந்தனம். எப்போதும் காப்பீர். (2)*

अतुलितबलधामं स्वर्णशैलाभदेहं
दनुजवनकृशानुं ज्ञानिनामग्रगण्यम् ।
सकलगुणनिधानं वानराणामधीशं
रघुपतिप्रियभक्तं वातजातं नमामि ॥ ३

*ஈடற்ற வலிவின் இருப்பிடம், தங்கமலை போன்ற மேனி உள்ளவர், அரக்கர் காட்டின் காட்டுத்தீ, பேரறிஞர்களின் முன்னோடி, குணங்கள் அனைத்தின் வைப்பிடம், வானரர்த் தலைவர், ராகவனின் அன்புக்குரிய பக்தர், அந்த வாயு குமாரரை வணங்குகிறேன். (3)*

अपराजित पिङ्गाक्ष नमस्ते राजपूजित ।
दीने मयि दयां कृत्वा मम दुःखं विनाशय ॥ ४

*பிறரால் வெல்ல இயலாதவரே! சிவந்த கண்ணரே! அரசர்களால் பூஜிக்கப் பெற்றவரே! என்னிடம் பரிவுகாட்டி என் துயரை நீக்குவீர். (4)*

अशेषलङ्कापतिसैन्यहन्ता श्रीरामसेवाचरणैककर्ता ।
अनेकदुःखाहतलोकगोप्ता त्वसौ हनूमान्मम सौख्यकर्ता ॥ ५

*லங்கையரசனின் படை அனைத்தையும் அழித்தவர், ஸ்ரீ ராமனின் பணிவிடையொன்றையே செய்பவர், துயரங்கள் பலவற்றால் அடிபட்ட மக்களைக் காப்பவர். இந்த ஹனுமான் எனக்கு இன்பம் அளிப்பவர். (5)*

आञ्जनेयं पाटलास्यं स्वर्णाद्रिसमविग्रहम् ।
पारिजातद्रुमूलस्थं वन्दे साधकनन्दनम् ॥ ६

*அஞ்சனையின் புதல்வர், சிவந்த முகமுள்ளவர். தங்கமலை போன்ற மேனியர். பாரிஜாத மரத்தடியில் வசிப்பவர். அவரை வழிபடுவதில் முனைந்தவரை மகிழ்விப்பவர். அவரை வணங்குகிறேன். (6)*

आञ्जनेयमतिपाटलाननं काञ्चनाद्रिकमनीयविग्रहम्।
पारिजाततरुमूलवासिनं भावयामि पवमाननन्दनम्॥ ७

*அஞ்சனையின் புதல்வர், மிகச் சிவந்த முகமுள்ளவர், தங்கமலை (மேரு) போன்று அழகிய உருவமைந்தவர், பாரிஜாத மரத்தடியில் வசிப்பவர். அந்த வாயுகுமாரனை உள்ளத்தில் காண்கிறேன்.(7)*

आधिव्याधिमहामारिग्रहपीडापहारिणे।
प्राणापहर्त्रे दैत्यानां रामप्राणात्मने नमः॥ ८

*மனநோய், உடல்நோய் மற்றும் கொள்ளைநோய்களின் பீடையையும் நவக்கிரக பீடையையும் போக்குபவரும் அரக்கரின் உயிரைப் பறிப்பவரும் ராமனுக்கு உயிரான வருமானவருக்கு வந்தனம்.(8)*

आपन्नाखिललोकार्तिहारिणे श्रीहनुमते।
अकस्मादागतोत्पातनाशनाय नमोऽस्तु ते॥ ९

*துயருற்ற மக்களனைவரின் துயர் நீக்குபவரும் எதிர்பாராமல் நேர்கிற விபத்தை நீக்குபவருமான சீர்மிக்க ஹனுமானுக்கு வணக்கம்.(9)*

उद्यत्कोट्यर्कसङ्काशं जगत्प्रक्षोभहारकम्।
श्रीरामांघ्रिध्याननिष्ठं सुग्रीवप्रमुखार्चितम्।
वित्रासयन्तं नादेन राक्षसान् मारुतिं भजे॥ १०

*உதிக்கின்ற கோடி ஸூரிய ஒளிகொண்டவரும், உலகைக் குமுறச்செய்பவைகளை அகற்றுபவரும் ஸ்ரீ ராமனின் திருவடிகளைத் தியானிப்பதில் நிலைத்தவரும் ஸுக்ரீவன் முதலானோரால் வழிபடப் பெற்றவரும் உரக்க கோஷிப்பதால் அரக்கர்களை நடுங்கச் செய்பவருமான வாயுகுமாரரைப் புகலடைகிறேன்.(10)*

उद्यदादित्यसङ्काशमुदारभुजविक्रमम्।
कन्दर्पकोटिलावण्यं सर्वविद्याविशारदम्॥ ११

श्रीरामहृदयानन्दं भक्तकल्पमहीरुहम्।
अभयं वरदं दोर्भ्यां कलये मारुतात्मजम्॥ १२

*உதிக்கின்ற ஸூரியனைப் போல் ஒளிர்பவரும் பெருஞ்தோள் வலிவுள்ளவரும் கோடிமன்மதர்களின் அழகு கொண்டவரும், வித்யைகளனைத்திலும் தேர்ந்தவரும் ஸ்ரீ ராமனின் உள்ளத்தை ஆனந்திக்கச் செய்பவரும் பக்தர்கள் விரும்பியதை வழங்குகிற கற்பகமரமும் அபயமும் வரமும் கைகளால் வழங்குபவருமான வாயுகுமாரனை வழிபடுகிறேன். (11-12)*

उद्यन्मार्तण्डकोटिप्रकटरुचियुतं चारुवीरासनस्थं
मौञ्जीयज्ञोपवीतारुणरुचिरशिखाशोभनं कुण्डलाङ्कम्।
भक्तानामिष्टदं तं प्रणतमुनिजनं मेघनादप्रमोदं
वन्दे देवं विधेयं प्लवगकुलपतिं गोष्पदीभूतवार्धिम्॥ १३

*உதிக்கின்ற கோடி ஸூர்யஒளி கொண்டவர், வீராஸநத்தில் அழகுடன் அமர்ந்தவர், முஞ்ஜக்கயிறு, உபவீதம், செந்நிறகேசம் இவற்றால் அழகியவர், குண்டலமணிந்தவர், பக்தர்கள் விரும்பியதை அளிப்பவர். முனிவர்களால் வணங்கப் பெற்றவர், மேகம்போன்று கர்ஜித்து மகிழ்பவர், இதமாக உதவுபவர், வானரக்கூட்டத் தலைவர், மாட்டின் குளம்படியைப்போல் கடலைத்தாண்டியவர், அந்த தேவனை வணங்குகிறேன். (13)*

उल्लंघ्य सिन्धोः सलिलं सलीलं यः शोकवह्निं जनकात्मजायाः।
आदाय तेनैव ददाह लङ्कां नमामि तं प्राञ्जलिराञ्जनेयम्॥ १४

*கடலின் நீரை எளிதில் விளையாட்டாகக் கடந்து ஜனகரின் மகளின் துயராகிய நெருப்பைக் கொணர்ந்து அதனால் லங்கையைச் சுட்டெரித்த அந்த அஞ்ஜனையின் புதல்வரைக் கைகூப்பி வணங்குகிறேன். (14)*

कदापि शुभ्रैर्वरचामरैः प्रभुं
गायन् गुणान् वीजयति स्थितोऽग्रतः ।
कदाप्युपश्लोकयति स्वनिर्मितैः
स्तवैः शुभैः श्रीहनुमान् कृताञ्जलिः ॥ १५

*ஸ்ரீ ஹனுமான் கைகூப்பியவாறு பிரபுவான ராமனின் முன்நின்று சிறந்த வெண்சாமரங்களை வீசுவார். அவரது சிறப்புகளைப் பாடுவார். சிலசமயம் தான் இயற்றிய துதிகளால் பாராட்டுவார்.(15)*

करात्तशैलशस्त्राय द्रुमशस्त्राय ते नमः ।
बालैकब्रह्मचर्याय रुद्रमूर्तिधराय च ॥ १६

*மலையெனும் ஆயுதத்தைக் கையிலேந்தியவர், மரத்தை ஆயுதமாக ஏந்தியவர். பால நிலையிலிருந்தே பிரும்மசாரி, ருத்ரரின் அவதாரம், அவருக்கு நமஸ்காரம்.(16)*

कारागृहे प्रयाणे च संग्रामे देशविप्लवे ।
स्मरन्ति त्वां हनूमन्तं तेषां नास्ति विपत्तदा ॥ १७

*சிறையிலும் பிரயாணத்திலும் போரிலும் தேசக்கொந்தளிப்பிலும் ஹனுமானை- உம்மை ஸ்மரிப்பவருக்குக் கேடு நேராது.(17)*

कृतक्रोधे यस्मिन्नमरनगरी मङ्गलरवा
नवातङ्का लङ्का समजनि वनं वृश्चति सति ।
सदा सीताकान्तप्रणतिमतिविख्यातमहिमा
हनूमानव्यान्नः कपिकुलशिरोमण्डनमणिः ॥ १८

*இவர் கோபம் கொண்டதும் தேவர்களின் நகரம் மங்கள ஒலி கொண்டிருக்கும். இலங்கையின் காட்டை இவர் அழிக்கும் போது இலங்கை புதுப்புது துன்பங்களை அனுபவித்தது. ஸீதையின் மணாளனை எப்போதும் வணங்குவதால் பெருமையும்*

புகழும் கொண்டவரும் வானரர் குலத்து சூடாமணியானவருமான ஹனுமான் நம்மைக் காக்கட்டும்.(18)

गोष्पदीकृतवाराशिं मशकीकृतराक्षसम् ।
रामायणमहामालारत्नं वन्देऽनिलात्मजम् । १९

கடலை மாட்டின் குளம்படி போல் கடந்தவர். அரக்கர்களைக் கொசுபோல் ஆக்கியவர். ராமாயணமெனும் மாலைக்கணியான ரத்தினமானவர். அந்த வாயு குமாரரை வணங்குகிறேன்.(19)

जानुस्थवामबाहुं च ज्ञानमुद्रापरं हरिम् ।
अध्यात्मचित्तमासीनं कदलीवनमध्यगम् ।
बालार्ककोटिप्रतिमं वन्दे ज्ञानप्रदं हरिम् ।। २०

முழங்கால் மீது இடதுகையை வைத்திருப்பவர். ஜ்ஞானமுத்ரை காட்டுகிற வலதுகை கொண்டவர், வானரர், வாழைக்காட்டின் நடுவே ஆத்ம சிந்தனையுடன் அமர்ந்தவர், கோடி இளஞ்சூரியனுக் கொப்பானவர். அறிவை வழங்குகிற அந்த வானரரை வணங்குகிறேன்.(20)

ज्वलत्काञ्चनवर्णाय दीर्घलाङ्गूलधारिणे ।
सौमित्रिजयदात्रे च रामदूताय ते नमः ।। २१

ஒளிமிக்க தங்கமேனியர் நீண்டவாலைக் கொண்டவர். லக்ஷ்மணனை வெற்றி பெறச்செய்தவர். ராமனின் தூதர், உமக்கு வந்தனம்.(21)

तप्तचामीकरनिभं भीघ्नं संविहिताञ्जलिम् ।
चलत्कुण्डलदीप्तास्यं पद्माक्षं मारुतिं भजे ।। २२

உருக்கிய தங்கநிறம் கொண்டவர், பயத்தை நீக்குபவர், கைகூப்பி நிற்பவர். ஆடுகின்ற குண்டல ஒளியால் ஒளிர்கிற முகம் உள்ளவர். தாமரைக் கண்ணர், அந்த வாயுகுமாரரை வழிபடுகிறேன்.(22)

द्विभुजं स्वर्णवर्णाभं रामसेवापरायणम् ।
मौञ्जीकौपीनसहितं तं वन्दे रामसेवकम् ।। २३

*இருகைகளுள்ளவர், தங்கமேனியர், ராமனது பணிவிடையில் முனைந்தவர், மௌஞ்சீ அரைஞாண்கயிறும் கௌபீனமும் தரித்தவர், ராமனின் ஸேவகர், அவரை வணங்குகிறேன். (23)*

दहनतप्तसुवर्णसमप्रभं भयहरं हृदये विहिताञ्जलिम् ।
श्रवणकुण्डलशोभिमुखाम्बुजं नमत वानरराजमिहाद्भुतम् ।। २४

*நெருப்பில் வாட்டிய தங்கம்போல் ஒளிர்பவர், பயத்தை நீக்குபவர், மார்புமீது கைகூப்பியவர், காதுகளில் குண்டலத்தால் ஒளிர்கிற முகம் உள்ளவர், அற்புதமான அந்த வானரராஜரை வணங்குவீர்(24))*

नखायुधाय भीमाय दन्तायुधधराय च ।
विहङ्गाय च शर्वाय वज्रदेहाय ते नमः ।। २५

*நகத்தை ஆயுதமாகக் கொண்டவர், அச்சுறுத்துபவர், பற்களை ஆயுதமாகக் கொண்டவர், வானில் செல்பவர், (எதிரியை) செதுக்கி அழிக்கிற சிவன், வஜ்ரம் பொன்ற திடஉடல் கொண்டவர். அந்த உமக்கு வந்தனம். (25)*

नादबिन्दुकलातीतं उत्पत्तिस्थितिवर्जितम् ।
साक्षादीश्वरसद्रूपं हनूमन्तं भजाम्यहम् ।। २६

*நாதம் பிந்து கலை என்ற ஒலியின் மிகஸூக்ஷ்மநிலைக்கு அப்பாற்பட்டவர். தோற்றம் நிலைப்பு அற்றவர், ஈசுவரனின் பேரிருக்கைவடிவினர். அந்த ஹனுமானை நான் வழிபடுகிறேன். (26)*

पञ्चास्यमच्युतमनेकविचित्रवर्ण-
वक्त्रं शशाङ्कशेखरं कपिराजवर्यम् ।

पीताम्बरादिमुकुटैरुपशोभिताङ्गम्
पिङ्गाक्षमाद्यमनिशं मनसा स्मरामि ॥ २७

ஐந்து முகமுள்ளவர், பற்பல விசித்திர வண்ணம் கொண்ட முகமுள்ளவர், சந்திரனை முடியில் சூடியவர், சிறந்த வானரத்தலைவர். மஞ்சள் நிறத்தாடை கிரீடம் முதலியவற்றால் மேனியழகு கொண்டவர், சிவந்தகண்களுள்ளவர், முதல்வர் இவரை எப்போதும் உள்ளத்தில் கொள்கிறேன். (27)

पद्मरागमणिकुण्डलत्विषा पाटलीकृतकपोलमण्डलम् ।
दिव्यहेमकदलीवनान्तरे भावयामि पवमाननन्दनम् ॥ २८

தெய்வத்தன்மைமிக்க வாழைக்காட்டின் இடையே பத்மராக ரத்னகுண்டல ஒளியால் சிவந்த கன்னப்பகுதி கொண்டவர். அந்த வாயுகுமாரனை உள்ளத்தில் காண்கிறேன். (28)

प्रतप्तस्वर्णवर्णाभं संरक्तारुणलोचनम् ।
सुग्रीवादियुतं वन्दे पीताम्बरसमावृतम् ।
गोष्पदीकृतवारीशं (राशिं) पुच्छमस्तकमीश्वरम्
ज्ञानमुद्रां च बिभ्राणं सर्वलङ्कारभूषितम् ॥ २९

காய்ச்சிய தங்கஒளிகொண்டவர். கண்சிவந்தவர், ஸுக்ரீவன் முதலானவருடன் கூடியவர். பீதாம்பரம் அணிந்தவர், கடலைக்குளம்படியாக்கியவர், வாலைத்தலையில் கொண்டவர். பேராண்மையுள்ளவர் ஜ்ஞானமுத்ரையைக் காட்டுபவர். ஆபரணங்களனைத்தையும் பூண்டவர். இவரை வணங்குகிறேன். (29)

बुद्धिर्बलं यशो धैर्यं निर्भयत्वमरोगता ।
अजाड्यं वाक्पटुत्वं च हनूमत्स्मरणाद्भवेत् ॥ ३०

நுண்ணறிவு, வலிவு, புகழ், உறுதி, அச்சமின்மை, நோயின்மை, ஜடத்தன்மையின்மை, வாக்குவல்லமை இவை ஹனுமானைத் தியானிப்பதால் ஏற்படும். (30)

भान्विन्दूचरणारविन्दयुगलं कौपीनमौञ्जीधरं
काञ्चिश्रेणिधरं दुकूलवसनं यज्ञोपवीताजिनम्।
हस्ताभ्यां धृतपुस्तकं च विलसद्धारावलिं कुण्डलं
खेचालं विशिखं प्रसन्नवदनं श्रीवायुपुत्रं भजे ॥ ३१

*ஸூரிய சந்திரமண்டலங்களுக்கு மேல் திருவடித் தாமரை கொண்டவர், கௌபீனமும் மௌஞ்ஜியும் தரித்தவர், இடுப்பு சங்கிலி அணிந்தவர் பட்டாடை உடுத்தியவர், உபவீதமும் மான்தோலும் பூண்டவர், கைகளால் புத்தகமும் ஜபமாலையும் ஏந்தியவர், குண்டலமணிந்தவர், வானில் செல்பவர். சிகை முடிப்பு இல்லாதவர், தெளிந்த இனிய முகம் உள்ளவர். இந்த வாயுகுமாரரை வழிபடுகிறேன்.(31)*

मनोजवं मारुततुल्यवेगं जितेन्द्रियं बुद्धिमतां वरिष्ठम्।
वातात्मजं वानरयूथमुख्यं श्रीरामदूतं शिरसा नमामि ॥ ३२

*மனத்தின் வேகம் கொண்டவர், வாயுவின் வேகம் கொண்டவர், புலனடக்கம் உள்ளவர், பேரறிஞர்களில் மிகச்சிறந்தவர். வாயுவின் குமாரர், வானரப்படைத்தலைவர், ஸ்ரீராமனின் தூதர், இவரைத் தலையால் வணங்குகிறேன்.(32)*

मरुत्सुतं रामपदारविन्द वन्दारुबृन्दारकमाशु वन्दे।
धीशक्तिभक्तिद्युतिसिद्धयो यं कान्तं स्वकान्ता इव कामयन्ते ॥ ३३

*வாயுவின் குமாரர், ராமனின் திருவடித்தாமரைகளை வழிபடுபவரில் சிறந்தவர். காதலி தன் காதலனை நாடுவதைப்போல் அறிவும் ஆற்றலும் பக்தியும் ஒளியும் செயல் நிறைவும் இவரைத் தானே விரும்பி அணுகுகின்றன.(33)*

मर्कटेश महोत्साह सर्वशत्रुहरोत्तम।
शत्रुं संहर मां रक्ष श्रीमन्नापद उद्धर ॥ ३४

*வானரர்களின் தலைவரே! பெரும் உற்சாகம் கொண்டவரே! எதிரிகளனைவரையும் மாய்ப்பவரே! சிறந்தவரே! சீர்மிக்கவரே!*

*எதிரியை ஒடுக்குவீர்! என்னைக்காப்பீர்! ஆபத்திலிருந்து வெளிக் கொணர்வீர். (34)*

मर्कटेश महोत्साह सर्वातङ्कनिवारक।
अरीन्संहर मां रक्ष सुखं दापय मे प्रभो॥ ३५

*வானரர் தலைவரே, பெரும் உற்சாகம் கொண்டவரே! எல்லாத் துயரங்களையும் நீக்குபவரே! எதிரிகளை அழிப்பீர்! என்னைக் காப்பீர்! வல்லவரே! இன்பம் பெறச்செய்வீர். (35)*

महाशैलं समुत्पाट्य धावन्तं रावणं प्रति।
तिष्ठ तिष्ठ रणे दुष्ट घोररावं समुच्चरन्॥ ३६
लाक्षारसारुणं वन्दे कालान्तकयमोपमम्।
ज्वलदग्निलसन्नेत्रं सूर्यकोटिसमप्रभम्।
अङ्गदाद्यैर्महावीरैर्वेष्टितं रुद्ररूपिणम्॥ ३७

*ராவணனை நோக்கிப் பெரும் மலையை பெயர்த்து துஷ்டனே! போரிட நிற்பாய், நிற்பாய்! எனக்கூச்சலிட்டு விரட்டுபவர். கொம்பரக்கு போன்று சிவந்தவர், காலயமனைப் போன்றவர், கொழுந்து விட்டெரிகின்ற நெருப்பு போன்ற கண்களுள்ளவர், கோடிஸூர்ய ஒளிகொண்டவர், அங்கதன் முதலிய வானரவீரர்கள சூழநிற்பவர் ருத்திரரின் ஸ்வரூபம், அவரை வணங்குகிறேன். (36-37)*

मारुतिं वीरवज्राङ्गं भक्तरक्षणदीक्षितम्।
हनूमन्तं सदा वन्दे राममन्त्रप्रचारकम्॥ ३८

*வாயுவின் புதல்வர், வீரர், வைரம் பாய்ந்த உடலுள்ளவர், பக்தரைக்காப்பதில் முனைந்தவர், ராமனின் மந்திரத்தை போதித்துப் பரவச்செய்தவர். அந்தஹனுமானை எப்போதும் வணங்குகிறேன். (38)*

यत्र यत्र रघुनाथकीर्तनं तत्र तत्र कृतमस्तकाञ्जलिम्।
बाष्पवारिपरिपूर्णलोचनं मारुतिं नमत राक्षसान्तकम्॥ ३९

ரகுநாதனுன ராமனைப் பாடுமிடங்களில் எல்லாம் தலைமீது கைகூப்பி நிற்பவர், கண்ணீர்ப்பெருக்கு நிறைந்த கண்கள் உள்ளவர், அரக்கர்களின் யமன், வாயுகுமாரரான அவரை வணங்குவீர். (39)

यो वारांनिधिमल्पपल्वलमिवोल्लंघ्य प्रतापान्वितो
वैदेहीघनशोकवह्निहरणो वैकुण्ठभक्तप्रिय:।
अक्षाद्यर्जितराक्षसेश्वरमहादर्पापहारी रणे
सोऽयं वानरपुङ्गवोऽवतु सदा चास्मान् समीरात्मज:॥ ४०

கடலைக் குட்டையைப்போல் தாண்டி பேராற்றலுடன் ஸீதையின் கடுந்துயரைப் போக்கியவர். விஷ்ணுபக்தர்களிடம் அன்பு கொண்டவர். அக்ஷன் முதலிய அரக்கர்தலைவரின் பெருந்திமிரைப் போரில் அழித்தவர், வானரர்களில் சிறந்தவர். வாயுகுமாரர், அவர் எப்போதும் நம்மைக் காக்கட்டும். (40)

राजद्वारि बिलद्वारि प्रवेशे भूतसङ्कुले।
गजसिंहमहाव्याघ्रचौरभीषणकानने। ४१

शरणाय शरण्याय वातात्मज नमोस्तु ते।
नम: प्लवगसैन्यानां प्राणभूतात्मने नम:॥ ४२

வாயுகுமாரரே! அரண்மனைவாயில், பிலவாயில், பூதகணங்கள் சூழ்ந்தவாயில், யானை, சிங்கம், புலி, திருடன் முதலியவற்ருல் அச்சுறுத்துகிற காடு, இவற்றில் புகலிடமும் புகலிடம் கொள்ளத்தக்கவரும் வானரப்படையின் உயிருமான உமக்கு நமஸ்காரம். (41-42)

रामेष्टं करुणापूर्णं हनूमन्तं भयापहम्।
शत्रुनाशकरं भीमं सर्वाभीष्टफलप्रदम्॥ ४३

प्रदोषे त्वां प्रभाते वा ये स्मरन्त्यञ्जनासुतम्।
अर्थसिद्धिं यश:पूर्तिं प्राप्नुवन्ति न संशय:॥ ४४

ராமனுக்கு நண்பர், கருணை நிறைந்தவர், பயம் நீக்குபவர், எதிரியை அழிப்பவர், பயங்கரத் தோற்றம் கொண்டவர், விரும்பியனைத்தையும் தருபவர். அஞ்சனையின் புதல்வரான உம்மை நற்காலையிலோ மாலையிலோ தியானிப்பவர் விரும்பியதைப்பெறுவர். புகழுடைவர். ஐயமில்லை. *(43-44)*

लाक्षारसारुणं वन्दे कालान्तकयमोपमम् ।
ज्वलदग्निलसन्नेत्रं सूर्यकोटिसमप्रभम् ।
अङ्गदाद्यैर्महावीरैर्वेष्टितं रुद्ररूपिणम् ॥ ४५

கொம்பரக்குக்குழம்பு போன்று சிவந்தவர், யமனைப்போன்றவர், எரிகிற நெருப்பு போன்ற கண்களுள்ளவர், கோடி ஸூர்யஒளி கொண்டவர், அங்கதன் முதலிய பெருவீரர்களால் சூழப்பெற்றவர், ருத்திரனின் ஸ்வரூபம் இவரை வணங்குகிறேன். *(45)*

वज्रदेहाय कालाग्निरुद्रायामिततेजसे ।
ब्रह्मास्त्रस्तम्भनायास्मै नमः श्रीरुद्रमूर्तये ॥ ४६

வைரம் பாய்ந்த உடலுள்ளவர், காலாக்னி ருத்ரரானவர், அளவிட இயலாத ஒளிகொண்டவர், பிரும்மாஸ்திரத்தை ஸ்தம்பிக்கச் செய்த அந்த ருத்திரமூர்த்திக்கு வணக்கம். *(46)*

वज्राङ्गं पिङ्गकेशाढ्यं स्वर्णकुण्डलमण्डितम् ।
नियुद्धमुपसंक्रम्य पारावारपराक्रमम् ॥ ४७

वामहस्तगदायुक्तं पाशहस्तकमण्डलुम् ।
उद्यद्दक्षिणदोर्दण्डं हनूमन्तं विचिन्तये ॥ ४८

வஜ்ரம் போன்ற மேனியுள்ளவர், செம்பட்டையான கேசமுள்ளவர். தங்கக் குண்டலமணிந்தவர், ஒருவரோடொருவர் மோதுகின்ற போரில் இடதுகையில் கதை கொண்டு வலதுகையை உயர்த்தி நிற்பவர், பாசமும் கமண்டலுவும் ஏந்தியவர், இந்த ஹனுமானைத் தியானிக்கிறேன். *(47-48)*

वज्राङ्गं पद्मनेत्रं कनकमयलसत् कुण्डलाक्रान्तगण्डं
दम्भोलिस्तम्भसार प्रहरणसुवशीभूत रक्षोऽधिनाथम्।
उद्यल्लाङ्गूलसप्ताचलविचलकरं भीममूर्तिं कपीन्द्रं
वन्दे तं रामचन्द्रप्रमुखदृढतरं सत्प्रसारं प्रसन्नम्॥ ४९

*வஜ்ரம் போன்ற உடல் கொண்டவர், தங்கக்குண்டல ஒளி படர்ந்தகன்னமுள்ளவர் வைரத்தூண் போன்ற உள்வலிவால் அரக்கர் தலைவனை மயங்கச் செய்தவர். வாலை உயர்த்தி ஏழுமலைகளை அசைத்தவர், அச்சுறுத்துகிற தோற்றமுள்ளவர், வானரத்தலைவர். ராமசந்திரனின் எதிரில் வலிவுமிக்கவராக உள்ளவர். உள்ளத்து வலிமை கொண்டவர், தெளிவானவர், அவரை வணங்குகிறேன். (49)*

वन्दे बालदिवाकरद्युतिनिभं देवारिदर्पापहं
देवेन्द्रप्रमुखैः प्रशस्तयशसं देदीप्यमानं रुचा।
सुग्रीवादिसमस्तवानरयुतं सुव्यक्ततत्त्वप्रियं
संरक्तारुणलोचनं पवनजं पीताम्बरालङ्कृतम्॥ ५०

*இளஞ்சூரிய ஒளிகொண்டவர், தேவர்களின் எதிரிகளின் திமிரை அடக்கியவர். இந்திரன் முதலானோரால் புகழ்ப்பெற்றவர், ஒளியால் துலங்குபவர், ஸுக்ரீவர் முதலான வானரரனைவருடன் கூடியவர். நன்கு புலப்படுகிற (ராமனின்) பெருநிலையை விரும்புபவர், நன்கு சிவந்த கண்களுள்ளவர், பீதாம்பரம் உடுத்தியவர். அந்த வாயுகுமாரரை வணங்குகிறேன். (50)*

वन्दे रणे हनुमन्तं कपिकोटिसमन्वितम्।
धावन्तं रावणं जेतुं दृष्ट्वा सत्वरमुत्थितम्॥ ५१

लक्ष्मणं च महावीरं पतितं रणभूतले।
गुरुं च क्रोधमुत्पाद्य गृहीत्वा गुरुपर्वतम्॥ ५२

हाहाकारैः सदर्पैश्च कम्पयन्तं जगत्त्रयम् ।
ब्रह्माण्डं स समावाप्य कृत्वा भीमकलेवरम् ।। ५३

*போர்க்களத்தில் கோடி வானரர்களுடன் கூடியவர், ராவணனைக் கண்டதும் விரைவுடன் எழுந்து விரட்டுபவர், மஹாவீரரான லக்ஷ்மணன் போர்க்களத்தில் விழுந்ததைக் கண்டு பெரும் கோபத்துடன் பெருமலையை கொணர்ந்தவர், ஹாஹாகாரத்துடன் மூவுலகையும் நடுங்கச் செய்து அச்சுறுத்துகிற தோற்றத்தில் பிரும்மாண்டத்தையே வியாபித்து நிற்பவர். இந்த ஹனுமானை வணங்குகிறேன். (51-53)*

वन्दे वानरसिंहखगराट् क्रोडाश्ववक्त्रान्वितम्
दिव्यालङ्करणं त्रिपञ्चनयनं देदीप्यमानं रुचा ।
हस्ताब्जैरसिखेटपुस्तकसुधाकुम्भाङ्कुशाद्रीन् हलं
खट्वाङ्गं फणिभूरुहं दशभुजं सर्वारिवीरापहम् ।। ५४

*வானரம், சிங்கம், கருடன், வராஹம், குதிரை என ஐந்து முகம்கொண்டவர். தெய்விக ஆபரணமணிந்தவர், பதினைந்து கண்கள் கொண்டவர், பேரொளி கொண்டவர், தாமரை போன்ற பத்துகைகளில் கத்தி, கேடயம், புஸ்தகம், அமுத கலசம், அங்குசம், மலை, கலப்பை, கட்வாங்கம், பாம்பு, மரம் இவற்றை ஏந்தியவர், எதிரிவீரர்கள் அனைவரையும் அழித்தவர். இவரை வணங்குகிறேன். (பஞ்சமுக ஹனுமான்) (54)*

वामहस्ते महावृक्षं दशास्यकरखण्डनम् ।
उद्यद्दक्षिणदोर्दण्डं हनूमन्तं विचिन्तये ।। ५५

*ராவணனின் கைகளைத் துண்டிக்கிற பெருமரத்தை இடதுகையில் கொண்டு வலதுகையை உயர்த்தி நிற்கிற ஹனுமானைத் தியானிக்கிறேன். (55)*

वामे करे वैरिभिदं वहन्तं शैलं परे शृंखलहारटङ्कम् ।
दधानमच्छच्छवियज्ञसूत्रं भजे ज्वलत्कुण्डलमाञ्जनेयम् ।। ५६

*இடதுகையில் எதிரியை அழிக்கிற மலையைத்தாங்கி வலதுகையில் சங்கிலியும் உளியும் கொண்டவர். பளபளக்கிற உபவீதம் பூண்டவர். ஒளிர்கிற குண்டலமணிந்தவர். அந்த அஞ்ஜனைகுமாரரை வழிபடுகிறேன்.(56)*

वामे जानुनि वामबाहुमपरं तं ज्ञानमुद्रायुतं
हृद्देशे कलयन् वृतो मुनिगणैरध्यात्मदत्तेक्षणः ।
आसीनः कदलीवने मणिमये बालार्ककोटिप्रभो
ध्यायन् ब्रह्म परं करोतु मनसः सिद्धिं हनूमान्मम ॥ ५७

*இடதுமுழங்கால் மீது இடதுகையை வைத்து ஜ்ஞானமுத்ரையுடனுள்ள வலதுகையை இதயத்தில் வைத்து முனிவர்கள் சூழ உள்ளத்து ஆத்மதத்துவத்தை நோக்குபவராக வாழைக்காட்டில் இளஞ்சூரிய ஒளி கொண்ட ரத்னபீடத்தில் அமர்ந்து பிரும்மத் தியானத்தில் ஈடுபட்டுள்ள ஹனுமான் என் மனத்தின் செயல் நிறைவை அளிக்கட்டும்.(57)*

वामे शैलं वैरिभिदं विशुद्धं टङ्कमन्यतः ।
दधानं स्वर्णवर्णं च वन्दे कुण्डलिनं हरिम् ॥ ५८

*இடதுகையில் எதிரியை மாய்க்கிற மலையையும் வலதுகையில் தூயஉளியையும் ஏந்திய தங்கமேனியரும் குண்டலமணிந்தவருமான வானரரை வணங்குகிறேன்.(58)*

सदा राम रामेति नामामृतं तं सदा राममानन्दनिष्यन्दकन्दम् ।
पिबन्तं नमन्तं सुदन्तं हसन्तं हनूमन्तमन्तर्भजे तं नितान्तम्॥५९

*எப்போதும் ராம ராம என நாமாமுதத்தைப் பருகுபவர்.ஆனந்தச் சாறுள்ள கிழங்கான ராமனை எப்போதும் பருகுபவர், ராமனை வணங்குபவர், நல்லபற்களுடன் அழகாகச் சிரிப்பவர், அந்த ஹனுமானை எப்போதும் உள்ளத்தில் வழிபடுகிறேன். (59)*

सपीतकौपीनमुदञ्चिताङ्गुलिम् समुज्ज्वलन्मौञ्ज्यजिनोपवीतिनम्।
सकुण्डलं लम्बशिखासमावृतं तमाञ्जनेयं शरणं प्रपद्ये ॥ ६०

மஞ்சள்நிறக் கௌபீனம் கட்டியவர். விரல்களைத்தூக்கிக் காட்டுபவர், மௌஞ்ஜியும் மான்தோலும் உபவீதமும் பளபளக்க குண்டலத்துடன் தொங்குகிற சிகையுடனுள்ள ஆஞ்ஜநேயரைச் சரணடைகிறேன். (60)

सर्वारिष्टनिवारकं शुभकरं पिङ्गाक्षमक्षापहं
सीतान्वेषणतत्परं कपिवरं कोटीन्दुसूर्यभम्।
लङ्काद्वीपभयङ्करं सकलदं सुग्रीवसम्मानितं
देवेन्द्रादिसमस्तदेवविनुतं काकुत्स्थदूतं भजे ॥ ६१

கேடுகளனைத்தையும் தடுப்பவர், நன்மைபுரிபவர், சிவந்த கண்ணர், அக்ஷனை அழித்தவர். ஸீதையைத் தேடுவதில் முனைந்தவர், வானரரில் சிறந்தவர் கோடிசந்திரஸூரிய ஒளிகொண்டவர், லங்கைத்தீவை அச்சுறுத்துபவர், அனைத்தையும் வழங்குபவர், ஸுக்ரீவனால் பெரிதும் மதிக்கப் பெற்றவர். இந்திரன் முதலானதேவர் அனைவராலும் வணங்கப் பெற்றவர். அந்த ராமதூதரை வழிபடுகிறேன். (61)

संसारसागरावर्तकर्तव्यभ्रान्तचेतसाम्।
शरणागतमर्त्यानां शरण्याय नमोऽस्तु ते ॥ ६२

ஸம்ஸாரக் கடலின் சுழலில் அகப்பட்டுச் செய்வகையறியாது பிரமித்து நிற்கிற தன்னைச் சரணடைந்த மக்களுக்குப் புகலிடமான உமக்கு வணக்கம். (62)

सीतारामपदाम्बुजे मधुपवद्यन्मानसं लीयते
सीतारामगुणावली निशि दिवा यज्जिह्वया पीयते।
सीतारामविचित्ररूपमनिशं यच्चक्षुषोर्भूषणम्
सीतारामसुनामधामनिरतं तं सद्गुरुं तं भजे ॥ ६३

*ஸீதாராமர்களின் திருவடித் தாமரையில் தேனீபோல் மாந்தி நிற்பவர். ஸீதாராமர்களின் குணக்குவியலை இரவும் பகலும் நாக்கால் பருகுபவர், ஸீதாராமர்களின் வியப்புக்குரிய தோற்றத்தைத் தன் கண்களுக்கு அணியாகக் கொண்டவர். ஸீதாராமர்களின் நாமங்களில் எப்போதும் ஆழ்ந்தவர் அந்த ஸத்குருவை வழிபடுகிறேன்.(63)*

सीतावियुक्तश्रीरामशोकदुःखभयापह।
तापत्रितयसंहारिन्नाञ्जनेय नमोऽस्तु ते ।। ६४

*ஸீதையிடமிருந்து பிரிந்த ஸ்ரீராமனின் சோகத்தையும் துன்பத்தையும் பயத்தையும் போக்குபவரே! ஆத்யாத்மிக - ஆதிதைவிக - ஆதிபௌதிக தாபங்களை நீக்குபவரே! அஞ்ஜனையின் புதல்வரே உமக்கு வணக்கம்.(64)*

सीताशीर्वादसंपन्न समस्तावयवाक्षत।
लोललांगूलपातेन ममारातीन्निवारय ।। ६५

*ஸீதையின் வாழ்த்துக்களைப் பெற்றவரே! தாக்கப்பெறாத அங்கங்கள் உள்ளவரே! ஆடுகின்ற உம் வாலால் அடிப்பதால் என் எதிரிகளை அழிப்பீர்.(65)*

स्फटिकाभं स्वर्णकान्तिं द्विभुजं च कृताञ्जलिम्।
कुण्डलद्वयसंशोभिमुखाम्बुजमहं भजे ।। ६६

*ஸ்படிகம் போன்று தூயவர், தங்கஒளி கொண்டவர் இருகைகள் கொண்டவர், கைகூப்பி நிற்பவர், இருகுண்டலங்களால் அழகிய தாமரை போன்ற முகமுள்ளவர். அந்த ஹனுமானை வழிபடுகிறேன்.(66)*

स्वानन्दहेतोर्भजतां जनानां मग्नः सदा रामकथासुधायाम्।
असाविदानीं च निषेवमाणो रामं पतिं किम्पुरुषे किलास्ते ।। ६७

*தன்னை வழிபடுகிற மக்களின் உள்ளத்து ஆனந்தம் தரவென்றே ராமகதையமுதத்தில் ஆழ்ந்தவராக இப்போதும்*

கிம்புருஷவர்ஷத்தில் தன் ஸ்வாமியான ராமனை வழிபட்டுக் கொண்டிருக்கிறார் ஹனுமான். (67)

हनुमन्तं महावीरं वायुतुल्यपराक्रमम् ।
ममाभीष्टार्थसिद्ध्यर्थं प्रणमामि मुहुर्मुहुः ॥ ६८

பெரும்வீரர், வாயுவைப்போன்று பேராற்றல் கொண்டவர், அவரை என்விருப்பம் நிறைவுற அடிக்கடி வணங்குகிறேன். (68)

हनूमान् रामपादाब्जसङ्गी वर्णिवरः शुचिः ।
सञ्जीवनोपहर्ता मे दीर्घमायुर्ददात्विह ॥ ६९

ராமனின் திருவடித்தாமரையில் லயித்தவரும் பிரும்மசாரிகளில் சிறந்தவரும் தூயவரும் ஸஞ்ஜீவிமலையைக் கொணர்ந்தவருமான ஹனுமான் நீண்ட ஆயுளை அருளட்டும். (69)

—★—

# सुन्दरस्तवः

## ஸுந்தரஸ்தவம்

### (सुन्दरकाण्डप्रतिसर्गसंग्रहात्मकः)

### आत्रेय श्रीबालकृष्ण शास्त्रिविरचितः

(ஆத்ரேய பாலகிருஷ்ண சாஸ்திரீ இயற்றியது.) கிஷ்கிந்தா காண்டத்தின் கடைசி ஸர்க்கம் ஸுந்தர காண்டம், யுத்தகாண்டத்தின் முதல் ஸர்க்கம் என 70 ஸர்க்கங்களின் பொருளைத் தருகிற சுலோக அமைப்பு கொண்ட 70 சுலோகங்கள்.)

जाम्बवत्स्मारितबलं सागरोल्लङ्घनोत्सुकम् ।
स्मरतां स्फूर्तिदं दीनरक्षकं नौमि मारुतिम् ॥ १

ஜாம்பவானால் தனது வலிவு உணர்த்தப் பெற்றவர். கடலைக் கடப்பதில் ஆர்வமிக்கவர். தன்னை ஸ்மரிப்பவருக்கு உற்சாகம் தருபவர். எளியவரைக் காப்பவர் அந்த வாயுகுமாரனைத்துதிக்கிறேன். (1)

मैनाक-सुरसा-सिंहीरतिलङ्घ्याम्बुधेस्तटे।
पृषदंशाल्पकाकारं तिष्ठन्तं नौमि मारुतिम्॥ २

மைநாகம் ஸுரஸா ஸிம்ஹீ இவர்களைத் தவிர்த்துக் கடலின் அக்கரையில் பூனைவடிவில் நிற்பவர். அந்த வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (2)

त्रिकूटशृङ्ग वृक्षाग्र प्राकारादिष्ववस्थितम्।
दुर्गरक्षेक्षणोद्विग्नचेतसं नौमि मारुतिम्॥ ३

திரிகூட சிகரத்திலும் மரங்களின் உச்சியிலும் மதிற்சுவர்கள் மீதும் நின்று கோட்டையின் காப்பைக் கண்டு கலங்கியவர். அந்த வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (3)

लङ्कयाऽधृष्य वाममुष्टिघातावघूर्णया।
उक्त्वाऽऽयतिमनुज्ञातं सोत्साहं नौमि मारुतिम्॥ ४

எதிர்க்க இயலாத லங்காதேவி தன் இடது கைமுட்டியின் தாக்குதலால் கிரங்கியவளாகி லங்கையின் வருங்காலத்தைக் கூறி அனுமதி வழங்க, உற்சாகத்துடனுள்ள அந்த வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (4)

विविधैर्भवनैर्दीप्तां पुरीं राक्षससङ्कुलाम्।
पश्यन्तं राक्षसेन्द्रान्तःपुरगं नौमि मारुतिम्॥ ५

பலமாளிகைகளால் ஒளிபெற்று ராக்ஷஸர்களின் நடமாட்டமுள்ள லங்கையைக் கண்டு ராக்ஷஸ அரசரின் அந்தப்புரத்தினுட் சென்றஅந்த வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (5)

ज्यौत्स्न्यां निश्यतिरम्येषु हर्म्येषु जनकात्मजाम्।
मार्गमाणमदृष्ट्वा तां विषण्णं नौमि मारुतिम्॥ ६

*இரவில் நிலவில் மிக அழகான மாளிகைகளில் ஸீதையைத் தேடிக்காணுமல் நொந்து நிற்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (6)*

कुम्भकर्णादिरक्षोऽग्र्यप्रासादावृतमुत्तमम् ।
सुगुप्तं रावणगृहं विशन्तं नौमि मारुतिम् ।। ७

*கும்பகர்ணன் முதலிய அரக்கர் தலைவர்களின் பெருமாளிகைகளால் சூழப்பெற்ற ராவணனின் மாளிகையினுள் ரகசியமாக நுழைகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (7)*

पुष्पकाख्यं राजगृहं भूस्वर्गं विस्मयावहम् ।
दृष्ट्वाऽप्यदृष्ट्वा वैदेहीं दुः खितं नौमि मारुतिम् ।। ८

*பூமியில் ஸ்வர்க்கமான புஷ்பகம் என்ற அரசமாளிகையைக்கண்டு ஸீதையைக் காணுமல் துயருற்ற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (8)*

रत्नोज्ज्वलं विश्वकर्मनिर्मितं कामगं शुभम् ।
पश्यन्तं पुष्पकं स्फारनयनं नौमि मारुतिम् ।। ९

*விசுவகர்மாவால் அமைக்கப் பெற்றதும், ரத்னஒளிமிக்கதும் விரும்பியவாறு (வானில்) செல்வதும் மங்களமானதுமான புஷ்பகவிமானத்தை விரிந்த கண்களுடன் பார்க்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (9)*

सङ्कुलान्तःपुरं सुप्तनानार्यौवतमच्छलम् ।
दृष्ट्वाऽप्यविकृतं सीतां दिदृक्षुं नौमि मारुतिम् ।। १०

*கலகலப்புடன்உள்ள (ராவணனின்) அந்தப்புரத்தில் பலயுவதிகள் கூச்சமின்றிப் படுத்திருப்பதைக் கண்டும் மனத்தில் விகாரமேதுமின்றி ஸீதையைக் காண்பதிலேயே ஆர்வமிக்க வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (10)*

पीवानं रावणं सुप्तं तत्पत्नीं शयनेऽन्यतः ।
दृष्ट्वा सीतेति संहृष्टं चपलं नौमि मारु तिम् ।। ११

தூங்குகிற பருத்த ராவணனுக்கருகே மறுபறத்தில் படுத்திருக்கிற அவனது மனைவி மந்தோதரியைக் கண்டு ஸீதையைக் கண்டேன் என மகிழ்கிற சஞ்சலமிக்க வாயுகுமாரனைத் துதிக்கிறேன். *(11)*

सुप्तस्त्रीदृष्टिनष्टात्मब्रह्मचर्यविशङ्किनम् ।
अपक्रम्याऽऽपानभूमिं गच्छन्तं नौमि मारुतिम् ।। १२

*தூங்குகிற பெண்களைக் கண்டதால் தன் பிரும்மசரியம் இழக்கப்பட்டதோ என்று ஐயமுற்றபின் அங்கிருந்து அகன்று மதுபான சாலையில் நுழைகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (12)*

कालात्यय-नृपक्रोध-कार्यासिद्धि-विशङ्कितम् ।
निर्विण्णमप्यनिर्वेदे दृष्टार्थं नौमि मारुतिम् ।। १३

நேரக்கடத்தல், ஸுக்ரீவனின் கோபம், வந்த பணிநிறைவேறுமை இவற்ருல் கலங்கி மனம்தளர தளராதிருப்பதே பயன் தருமெனக்கண்டவாயுகுமாரனைத் துதிக்கிறேன். *(13)*

पुनर्निवृत्तौ कापेयमानुषापायशङ्किनम् ।
रामादीन् सिद्धये नत्वोत्तिष्ठन्तं नौमि मारुतिम् ।। १४

*திரும்பிச் செல்வதில் குரங்கு புத்தியும் மனிதர்களான ராமலக்ஷ்மண பரதாதிகளின் அழிவும் உண்டெனக் கண்டு செயல் நிறைவுற ராமன் முதலியவரை வணங்கிவேண்டி எழுந்த வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (14)*

सीतामशोकवनिकानद्यां स्नानार्थमेष्यतीम् ।
द्रष्टुं पुष्पितवृक्षाग्रनिलीनं नौमि मारुतिम् ।। १५

*அசோகவனத்திலுள்ள ஆற்றில் நீராட வரவிருக்கிற ஸீதையைக் காணவிரும்பி, பூத்தமரத்தின் மீது மறைந்தமர்ந்துள்ள வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (15)*

सीतां दृष्ट्वा शिंशपाधःस्थितां चारित्रमातृकाम्।
मनसा राममासाद्य निवृत्तं नौमि मारुतिम्॥ १६

*சிம்சபாமரத்தினடியில் கற்பின் அடையாளமாக அமர்ந்துள்ள ஸீதையைக் கண்டு மனத்தால் ராமனை அடைந்து திரும்பிய வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (16)*

इह सीता ततो रामः ईदृशीयं स तादृशः।
अन्योन्यमर्हत इति स्तुवन्तं नौमि मारुतिम्॥ १७

*இங்கே ஸீதை; அங்கே ராமன்; இவள் இவ்வாறு; அவர் அவ்வாறு; ஒருவருக்கொருவர் ஏற்றவர் இவர்களே எனத்துதிக்கிறவாயுகுமாரனைத் துதிக்கிறேன். (17)*

राक्षसीवेष्टितेहेयं तद्दृष्टाहं नृपात्मजौ।
नमामि सुकृतं मेऽतीत्याश्वस्तं नौमि मारुतिम्॥ १८

*இங்கு இவள் அரக்கிகளால் சூழ்ப்பட்டுள்ளதைக் கண்ட நான் அரசகுமாரர்களான ராமலக்ஷ்மணர்களை நமஸ்கரிக்கிறேன். என் புண்யம் அளவுகடந்ததெனத் தன்னைத்தேற்றிக் கொண்ட வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (18)*

सुप्तोत्थितं दृष्टपूर्वं रावणं प्रमदावृतम्।
सीतोपच्छन्दकं दृष्ट्वाऽवप्लुतं नौमि मारुतिम्॥ १९

*முன்தான் கண்டறிந்த ராவணன் விழித்தெழுந்து அரக்கிகள் புடைசூழ ஸீதையின் மனத்தைத் திருப்ப வந்ததைக் கண்டு பதுங்கி மறைந்த வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (19)*

रावणागमनोद्विग्नां विषण्णां वीक्ष्य मैथिलीम्।
सर्वोपमाद्रव्यदूरां सीदन्तं नौमि मारुतिम्॥ २०

*ராவணனின் வரவால் பதறி வருந்துகிற ஸீதை ஈடிணையற்றவளெனக் கண்டு வருந்துகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன்.(20)*

सान्त्वेनानुप्रदानेन शौर्येण जनकात्मजाम् ।
रक्षोऽधिपे लोभयति वृक्षस्थं नौमि मारुतिम् ॥ २१

*இதமாகப் பேசி விரும்பியதை வழங்குவதாகக்கூறி தன்வீரத்தை விளக்கி ராவணன் ஜானகியை மனமாற்றமடையச் செய்யும் போது மரத்தின் மீதமர்ந்துள்ள வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (21)*

मां प्रधृष्य सतीं नश्येरिति तद्धितवादिनीम् ।
करुणां रूपिणीं सीतां पश्यन्तं नौमि मारुतिम् ॥ २२

*கற்புள்ள என்னை வலிவில் அடைய முயன்றால் அழிவாய் என அவனுக்கு நலம்கூறிய கருணையே வடிவான ஸீதையைக் காண்கின்ற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (22)*

मासद्वयावधिं कृत्वा स्मारयित्वाऽऽत्मपौरुषम् ।
अपयातं रावणं धिक्कुर्वन्तं नौमि मारुतिम् ॥ २३

*தன் ஆண்மையை நினைவூட்டி இரண்டு மாதங்கள் அவகாசம் தந்து வெளியேறிய ராவணனைச் 'சீ' என இகழ்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (23)*

कुलं वीर्यं प्रेम गत्यन्तराभावं विवृण्वतीः ।
राक्षसीर्दुर्मुखीमुख्याः जिघत्सुं नौमि मारुतिम् ॥ २४

*(ராவணனது) குலம், வீர்யம், காதல், வேறுவழியின்மை என்பவற்றை விளக்குகிற துர்முகீ முதலிய அரக்கிகளை மாய்க்கத்துடிக்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (24)*

क्रुद्धाभिर्भर्त्स्यमानां तां आत्मानमनुशोचतीम् ।
देवीं विलोक्य रुदतीं खिद्यन्तं नौमि मारुतिम् ॥ २५

*கோபம் கொண்ட அரக்கிகளால் மிரட்டப்பெற்று தன்னையே நொந்து கொண்டு புலம்புகிற ஸீதையைக் கண்டு வருந்துகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (25)*

पुनर्निर्भत्सनपरास्वासु वेणीस्पृगङ्गुलिम् ।
मानुष्यगर्हिणीं देवीं पश्यन्तं नौमि मारुतिम् ।। २६

*மறுபடி அரக்கிகள் மிரட்டிக் கொண்டே இருக்க ஸீதை தன் கூந்தலைப் பற்றி மனிதப்பிறவியை நொந்து கொள்வதைக் காண்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (26)*

विलपन्तीं जनस्थानाहरणाद्यनुचिन्तनैः ।
प्राणत्यागपरां सीतां दृष्ट्वाऽऽर्तं नौमि मारुतिम् ।। २७

*ஜனஸ்தானத்திலிருந்து தான் கொணரப் பெற்றது முதலியதை நினைத்துப் புலம்பி உயிரை விடத்துணிந்த ஸீதையைக் கண்டு வருந்துகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (27)*

त्रिजटास्वप्नसंहृष्टां रक्षःस्त्रीभ्योऽभयप्रदाम् ।
अस्वस्थहृदयां देवीं पश्यन्तं नौमि मारुतिम् ।। २८

*திரிஜடையின் கனவு பற்றியறிந்து மகிழ்ந்து அரக்கிகளுக்கும் அபயமளித்தும் மனஅமைதியுறாத ஸீதையைக் காண்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (28)*

अचिरादात्मनिर्यातमदृष्ट्वोद्बन्धनोद्यताम् ।
सीतां दृष्ट्वा शिंशपाध उद्विग्नं नौमि मारुतिम् ।। २९

*தன்விடுதலை விரைவில் நேராதெனக்கண்டு தூக்குமாட்டிக் கொள்ள முனைந்த ஸீதையை சிம்சபாமரத்திடியில் கண்டு அமைதி இழந்த வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (29)*

वामाक्ष्यूरुभुजस्पन्दैः निमित्तैर्मुदितां शनैः ।
सीतां शान्तज्वरां दृष्ट्वा प्रहृष्टं नौमि मारुतिम् ।। ३०

*இடதுகண்ணும் துடையும் தோளும் துடிக்க நற்சகுனம் கண்டு மகிழ்ந்து பதட்டமடங்கிய ஸீதையைக்கண்டு மகிழ்ந்த வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (30)*

दृष्टाऽत्रेयं कथं सान्त्व्योपेयाऽऽवेद्या न वेद्म्यहम्।
इति रामकथाख्यानप्रवृत्तं नौमि मारुतिम्॥ ३१

*இப்போது இவளை எப்படி ஸமாதானப்படுத்துவது? எப்படி அணுகுவது? எப்படித் தெரிவிப்பது? ஒன்றும் புரியவில்லை என ராமனின் வரலாற்றை கூறத்தொடங்கிய வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (31)*

सुप्ते रक्षिगणे श्रुत्वा शुभां रामकथां द्रुमम्।
उत्पश्यन्तीं जनकजां पश्यन्तं नौमि मारुतिम्॥ ३२

*காவலர் கூட்டம் தூங்கும்போது மங்களமான ராமனின் வரலாற்றைக் கேட்டு மரத்தின் மீது உற்றுநோக்குகிற ஜானகியைக் காண்கிறவாயுகுமாரனைத் துதிக்கிறேன். (32)*

स्वप्ने कपिर्दुर्निमित्तं, श्रुता रामकथा शुभा।
देवीं द्वेधा विमुह्यन्तीं पश्यन्तं नौमि मारुतिम्॥ ३३

*கனவில் குரங்கு, கெட்டசகுனம். கேட்டது மங்களமான ராமகதை என இருவகையிலும் கலங்கி நிற்கிற தேவியைக்காண்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (33)*

का त्वं वसिष्ठचन्द्रात्रिपत्नीष्विति वितर्कितैः।
सीतामौनमपास्यन्तं प्रणतं नौमि मारुतिम्॥ ३४

*நீ யார்? வஸிஷ்டர், சந்திரன், அத்திரி இவர்களில் ஒருவரின் மனைவியா? என விசாரித்து ஸீதையின் மௌனத்தைக் கலைத்து வணங்கி நிற்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (34)*

रामदूतोऽस्मि मा भैषीः श्रद्धत्स्व प्रतिनेष्यसे।
विशङ्कां सन्त्यजेत्येवंवदन्तं नौमि मारुतिम् ३५

*நான் ராமனின் தூதன்! பயப்படாதீர்! நம்புவீர்! திரும்பி அழைத்துச் செல்லப்படுவீர்!எனக் கூறுகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (35)*

सुग्रीवसख्यं भूषाद्यावेदनं वालिनो वधम्।
तीर्त्वाब्धिं दर्शनं देव्या आख्यान्तं नौमि मारुतिम्॥ ३६

*ஸுக்ரீவனுடன் நட்பு, ஸீதை (எறிந்த) நகைகளைக் கண்டது, வாலிவதம், தான் கடலைத் தாண்டி தேவியைக் கண்டதென நடந்ததைக் கூறுகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (36)*

अभिज्ञानेन सुग्रीवोद्योगेन विरहाधिना।
सुखिनीं दुःखिनीं देवीं पश्यन्तं नौमि मारुतिम्॥ ३७

*பிரிவுத் துயருற்றவளை அடையாள மோதிரத்தாலும் ஸுக்ரீவனின் முயற்சி பலன் தருவதே எனக்கூறியதாலும் இன்பமுறச் செய்து அவளை நோக்கி நிற்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (37)*

मानिनीं दृढविस्रंभां राघवोद्योगकाङ्क्षिणीम्।
रक्षो जित्वैव नेयां तां नमन्तं नौमि मारुतिम्॥ ३८

*தன்மானம் மிக்கவளும் திடநம்பிக்கை கொண்டவளும் ராமனின் மேல் நடவடிக்கையை எதிர்பார்ப்பவளும் அரக்கனை வென்றே தன்னை அழைத்துச் செல்வதை எதிர்பார்ப்பவளுமான ஸீதையை வணங்கி நிற்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (38)*

काकोदन्तं रामगुणान् देवृभक्तिं शिरोमणिम्।
अभिज्ञानतया दात्रीं ध्यायन्तं नौमि मारुतिम्॥ ३९

*காக்கை வரலாறு, ராமனின் குணங்கள், மைத்துனர் லக்ஷ்மணனின் பக்தி, தன் சூடாமணி இவற்றை ராமனிடம் காட்ட அடையாளமாகத் தருகிற தேவியை உள்நோக்கி நிற்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (39)*

मणौ प्रतीतां उत्साहोद्योजनप्रार्थिनीं सतीम्।
आश्वासयन्तमुचितैर्हेतुभिः नौमि मारुतिम्॥ ४०

*சூடாமணியில் நம்பிக்கைக் கொண்டு ராமனை உற்சாக மூட்டித்தூண்ட வேண்டுகிற ஸீதையை தக்ககாரணம் கூறித்தேற்றுகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (40)*

पुनस्तदेवाभिज्ञानं स्मारयन्त्या कृताशिषम् ।
मैथिल्या मनसा राममासन्नं नौमि मारुतिम् ॥ ४१

*மறுபடி முன்கூறிய காக்கை வரலாறு முதலியவற்றை நினைவூட்டி அமைதியால் ஆசிவழங்கப் பெற்று மனத்தால் ராமனை அணுகிவிட்ட வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (41)*

दृष्ट्वा सीतां ध्रुवे जन्ये ज्ञातुं रक्षोबलं वनम् ।
विनाश्य तोरणासीनं युयुत्सुं नौमि मारुतिम् ॥ ४२

*ஸீதையைக் கண்டபின் போரிடுவது கட்டாயம் என உணர்ந்து ராவணனது படைவலிமையை அறியக்காட்டை அழித்து தோரணத்தின் மீதமர்ந்து போரிடத்துணிந்த வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (42)*

राक्षसीज्ञातवृत्तान्त रावणप्रेषितान् क्षणात् ।
निघ्नन्तं किङ्करानेकं जयिष्णुं नौमि मारुतिम् ॥ ४३

*அரக்கிகளின் மூலம் நிலைமையை உணர்ந்த ராவணன் அனுப்பிய கிங்கரர்களை நொடியில் தனித்து நின்றுமாய்த்து மேலும் வெற்றிபெறத் துணிந்த வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (43)*

जयत्यतिबल इति गर्जन्तं पादपाग्निना ।
दग्ध्वा चैत्यं पुनः सङ्ग्रामोत्सुकं नौमि मारुतिम् ॥ ४४

*மாவீரன் ராமன் வெல்கிறான் எனக் கர்ஜித்துக் கொண்டே மரத்தைக் கொளுத்தி தோட்ட மாளிகையை அழித்துப் போரிட முன் நிற்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (44)*

परिघीकृत्य सालद्रुं प्रहस्तसुतमारणम् ।
दशग्रीवबलेयत्ताजिज्ञासुं नौमि मारुतिम् ॥ ४५

*ஆச்சான் மரத்தை இரும்புத் தடியாகக் கொண்டு பிரஹஸ்தனின் மகனை (ஜம்புமாலியை) கொன்று ராவணனின்*

படையின் வரையைக் காணவிரும்புகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (45)

सप्तामात्यसुतान् आत्मनिनदैर्गतजीवितान् ।
कृत्वा पुनस्तोरणाग्रे लसन्तं नौमि मारुतिम् ।। ४६

தன் கர்ஜனையால் ஏழு மந்திரிகளின் புதல்வர்களை உயிரற்றவராக்கி மறுபடி தோரணத்தின் மீது துலங்குகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (46)

उद्विग्नरावणाज्ञप्तपृतनापतिपञ्चकम् ।
प्रापय्य पञ्चतां तोरणाग्रस्थं नौमि मारुतिम् ।। ४७

திகைத்த ராவணனால் ஆணையிடப்பட்ட ஐந்து ஸேநாபதிகளை அழித்துத் தோரணத்தின் முன் புறத்தில் அமர்ந்துள்ள வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (47)

अक्षं राजात्मजं वीरं दर्शनीयपराक्रमम् ।
हत्वा नियुद्धे तिष्ठन्तं तोरणे नौमि मारुतिम् ।। ४८

காணத்தக்க வீரமுள்ள ராவணனின் குமாரன் அக்ஷனைப்போரில் மாய்த்துத் தோரணத்தின் மீதமர்ந்த வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (48)

नीतमिन्द्रजिताऽस्त्रेण ब्राह्मेण क्षणरोधिना ।
सभास्थरावणोदीक्षाविस्मितं नौमि मारुतिम् ।। ४९

கணநேரம் தடைபடுத்துவதும் இந்திரஜித்தால் ஏவப்பட்டதுமான பிரும்மாஸ்திரத்தால் கட்டுண்டு கொண்டு செல்லப்பட்டு ஸபையில் அமர்ந்த ராவணனை உற்று நோக்கி வியப்புற்ற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (49)

दशास्यं मन्त्रिसंवीतं वरोदीर्णं महाद्युतिम् ।
अनादृत्याहवक्लान्तिं पश्यन्तं नौमि मारुतिम् ।। ५०

*வரங்களால் செருக்குற்றுப் பேரொளியுடன் மந்திரிகள் சூழ அமர்ந்துள்ள ராவணனை போரிட்டகளைப்பைப் பொருட் படுத்தாமல் உற்று நோக்குகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (50)*

**कोऽसि कस्यासि केनात्रागतो भग्नं वनं कुतः ।**
**प्रहस्तस्योत्तरं दातुमुद्युक्तं नौमि मारुतिम् ॥** ५१

*நீ யார்? எவனைச் சார்ந்தவன்! எதற்காக இங்கு வந்தாய்? ஏன் காடு அழிக்கப் பெற்றது? என்ற பிரஹஸ்தனுக்கு விடைகூறமுற்பட்ட வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (51)*

**सुग्रीवसचिवं रामदूतं सीतोपलब्धये ।**
**प्राप्तमुक्त्वा तद्धितोक्तिनिरतं नौमि मारुतिम् ॥** ५२

*ஸுக்ரீவனின் அமைச்சன், ராமனின் தூதன், ஸீதையைக்காண வந்ததாகக் கூறிஅவனுக்கு இதம் கூறமுற்பட்ட வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (52)*

**भ्रातृसान्त्वित पौलस्त्यादिष्ट वालाग्नि योजनम् ।**
**कर्तव्यचिन्ताऽतिव्यग्रं उदीर्णं नौमि मारुतिम् ॥** ५३

*தம்பியான விபீஷணனால் அமைதியுற்ற ராவணனின் ஆணையால் வாலில் நெருப்பு மூட்டப்பெற்று இனிச்செய்யவேண்டியதில் மிகவும் முனைந்து வெளிக்கிளம்பிய வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (53)*

**वालदाहभिया सीताप्रार्थनाशीतलानलम् ।**
**प्रीणयन्तं पुरीदाहाद् भीषणं नौमि मारुतिम् ॥** ५४

*வாலின் எரிப்பில் பயந்து ஸீதை வேண்டியதால் குளிர்ந்த அக்னியை நகரை எரிப்பதால் திருப்தியுறச் செய்கிற அச்சுறுத்துகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (54)*

**अवध्य इति वालाग्न्यस्ताग्निं नगरीं क्षणात् ।**
**दहन्तं सिद्धगन्धर्वैः स्तुतं तं नौमि मारुतिम् ॥** ५५

கொல்லத் தகாதவன் என வாலின் நுனியில் நெருப்பு வைக்கப் பெற்று, நகரை நொடியில் எரித்து சித்தரும் கந்தர்வரும் பாராட்டுகிற அந்த வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (55)

लब्धा सीता, रिपुर्ज्ञातः, बलं दृष्टं, वृथाऽखिलम्।
सीताऽपि मौढ्याद् दग्धेति सीदन्तं नौमि मारुतिम्॥ ५६

ஸீதை கண்டுபிடிக்கப் பெற்றாள்; எதிரியின் தகுதி அறியப் பெற்றது; படை காணப்பெற்றது; ஆனால் எல்லாம் வீணே; ஸீதையும் தன் அசட்டுத் தனத்தால் எரிக்கப்பட்டாளே! எனவருந்துகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (56)

आपृच्छ्य मैथिलीं रामदर्शनत्वरयाऽचलात्।
त्रिकूटादुत्पतन्तं तं कृतार्थं नौमि मारुतिम्॥ ५७

மைதிலியிடம் விண்ணப்பித்து விட்டு ராமனைக்காண விரைந்து திரிகூடமலையிலிருந்து எம்பிசெய்யத்தக்கதைச் செய்து முடித்த நிறைவுடன்தாவுகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (57)

सोपायनैरङ्गदाद्यैः उन्नदद्भिरुपास्थितम्।
दृष्टा सीतेत्युदीर्याथ व्याख्यान्तं नौमि मारुतिम्॥ ५८

அன்பளிப்புகளுடன் கோஷமிட்டு அங்கதன் முதலானோரால் வரவேற்கப்பட்டு ஸீதை காணப்பட்டாள் என விரிவாக விளக்குகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (58)

तीर्त्वाऽन्विष्योपलभ्याश्वास्य च भंक्त्वोपदिश्य च।
दग्ध्वा दृष्ट्वाऽऽगतोऽस्मीति ब्रुवन्तं नौमि मारुतिम्॥ ५९

கடலைக்கடந்து தேடி, ஸீதையைக்கண்டு அமைதிப்படுத்தி ராவண நகரை அழித்து ராவணனுக்கு வழிகூறி சீதையைக் கண்டு வந்துள்ளளேன் எனக்கூறுகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (59)

दृष्ट्वा सीतां रामनाम श्रावयित्वा समागतः।
ब्रूत कर्तव्यमित्येतान् पृच्छन्तं नौमि मारुतिम्॥ ६०

*ஸீதையைக்கண்டு ராமநாமத்தைப் பரப்பிவந்துள்ளேன். இனிச்செய்யவேண்டிதென்ன? என இவர்களைக் கேட்கிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (60)*

न वयं, कपिराडत्र प्रमाणं प्रतियाम तम्।
कुर्मस्तदादिष्टमिति प्रत्युक्तं नौमि मारुतिम्॥ ६१

*நாமல்ல, வானரராஜனே இதில் பொறுப்பாளர், அவரிடம் திரும்பிச் செல்வோம். அவரது உத்தரவுப்படி செய்வோம் என அவர்கள் கூறியதைக் கேட்ட வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (61)*

मध्येमार्गं मधुवने निपीय मधु पुष्कलम्।
नदद्भिर्वानरैः साकं क्रीडन्तं नौमि मारुतिम्॥ ६२

*நடுவழியில் மதுவனத்தில் நிறைய மதுவருந்திக் கொண்டாடுகிற வானரர்களுடன் விளையாடுகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (62)*

माद्यन्नृत्यत्कपिवृतं ध्वस्ते मधुवने क्षणात्।
अभियुक्तं दधिमुखेनाव्यग्रं नौमि मारुतिम्॥ ६३

*மதமேறி ஆடுகிற வானரர்கள் சூழநொடியில் ததிமுகனால் தடுக்கப் பெற்றவரும் கவலையுறாதவருமான வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (63)*

सीतां दृष्टां मधुवनध्वंसाद् विज्ञाय तुष्यता।
दिदृक्षितं कपीशेनात्यादरान्नौमि मारुतिम्॥ ६४

*மதுவனத்தின் அழிப்பால் ஸீதை காணப்பட்டதை ஊகித்து மகிழ்ந்த ஸுக்ரீவன் ஆதரவுடன் காணவிரும்பிய வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (64)*

निशम्य सुग्रीवादेशं त्वरितैः सखिभिर्वृतम्।
सुग्रीवेणादराद्दृष्टं महितं नौमि मारुतिम्॥ ६५

*ஸுக்ரீவனின் கட்டளையைக் கேட்டு விரைவுற்று நண்பர்கள் சூழச்சென்று ஸுக்ரீவனால் பரிவுடன் காணப்பெற்றுப் பெரிதும் மதிக்கப் பெற்ற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (65)*

नियतामक्षतां सीतां अभिज्ञानं मणिं च तम्।
निवेद्य प्राञ्जलिं प्रह्वं कृतार्थं नौमि मारुतिम्॥ ६६

*கட்டுப்பாட்டுடன் பாதுகாப்பாக உள்ள ஸீதை, அடையாளமான சூடாமணி இவற்றைக் கைகூப்பித் தெரிவித்து நிறைவுற்ற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (66)*

दृष्ट्वा चूडामणिं साश्रु स्मृत्वा तातविदेहयोः।
रामेण वृत्तविस्तारे चोदितं नौमि मारुतिम्॥ ६७

*நன்கு சூடாமணியை நோக்கித் தன் தந்தையையும் ஜனகரையும் நினைத்த ராமனால் நடந்ததை விளக்கத் தூண்டப் பெற்ற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (67)*

विस्रम्भं तर्जनं शोकावेगं च समयावधिम्।
सन्देशमुक्त्वा कर्तव्योद्योजकं नौमि मारुतिम्॥ ६८

*நம்பிக்கை, மிரட்டல், சோகவேகம், காலவரை, செய்தி என அனைத்தையும் கூறிசெயலில் தூண்டுகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (68)*

त्वच्चित्ता त्वयि विस्रब्धा विजित्य रिपुमञ्जसा।
प्रत्यादेयेति विनयाद्वदन्तं नौमि मारुतिम्॥ ६९

*உம்மையே நினைப்பவள் உம்மை நம்பியவள் விரைவில் எதிரியை வென்று மீட்கத்தக்கவள் எனப்பணிவுடன் கூறுகிற வாயுகுமாரனைத் துதிக்கிறேன். (69)*

स्निग्धरामपरीरम्भमुग्धस्मेरमुखाम्बुजम्।
हृदयासीनवैदेहीराघवं नौमि मारुतिम्॥ ७०

*நட்புமிக்க ராமனின் அணைப்பால் இனிது புன்சிரிக்கிற முகத்தாமரையுள்ளவரும் உள்ளத்தில் ஸீதையையும் ராமனையும் அமர்த்தியவருமான மாருதியைத்துதிக்கின்றேன். (70)*

* * *

# श्री हनूमत्स्मरणम्

## ஸ்ரீ ஹநூமத் ஸ்மரணம்

प्रातः स्मरामि हनुमन्तमनन्तवीर्यं
श्रीरामचन्द्रचरणाम्बुजचञ्चरीकम्।
लङ्कापुरीदहननन्दितदेववृन्दं
सर्वार्थसिद्धिसदनं प्रथितप्रभावम्॥ १॥

*எல்லையற்ற வீர்யம் கொண்டவர், ஸ்ரீ ராமசந்திரனின் திருவடித்தாமரைகளை வண்டாகச் சுற்றுபவர், லங்கை நகரை எரித்துத் தேவர்களை மகிழ்வித்தவர். நாடிய தனத்தை நிறைவுபெறச் செய்பவர், புகழ்பெற்ற பேராற்றல் கொண்டவர். அந்த ஹனுமானைக் காலையில் நினைவில் கொள்கிறேன். (1)*

माध्यं नमामि वृजिनार्णवतारणैक-
धीरं शरण्यमुदितानुपमप्रभावम्।
सीताऽऽधिसिन्धुपरिशोषणकर्मदक्षम्
वन्दारुकल्पतरुमव्ययमाञ्जनेयम्॥ २॥

*பாபக்கடலைத் தாண்டச் செய்வதில் தனித்த உறுதிகொண்டவர். சரணம்புகத்தக்கவர், இணையற்ற பேராற்றலை வெளிப்படுத்துபவர், ஸீதையின் உள்ளத்துயரெனும் கடலை வற்ற வைப்பதில் இணையற்ற வல்லமை கொண்டவர். வணங்கி நிற்கிற அடியார்களுக்குக் கற்பகமரம், தேய்வுறுதவர், அந்த*

*ஆஞ்சநேயரை நடுப்பகலில் தியானிக்கிறேன்.(2)*

सायं भजामि शरणोपसृताखिलार्ति-
पुञ्जप्रणाशनविधौ प्रथितप्रतापम् ।
अक्षान्तकं सकलराक्षसवंशधूम-
केतुं प्रमोदितविदेहसुतं दयालुम् ।। ३।।

*சரணடைந்தவரின் துயரனைத்தையும் குவித்து அழிப்பதில் புகழ்பெற்ற வல்லமை கொண்டவர், அக்ஷனுக்கு யமன், ராக்ஷஸரனைவரின் வம்சத்தையே அழித்த தூமகேது, விதேஹரின் மகளாகிய ஸீதையை மகிழ்வித்தவர். பரிவுமிக்கவர். இந்த ஆஞ்சநேயரை மாலையில் வழிபடுகிறேன்.(3)*

* * *

# श्रीहनुमत्स्तोत्रम्

## विभीषणोक्तम्

## ஸ்ரீ ஹனுமத் ஸ்தோத்திரம்

*விபீஷணர் இயற்றியது*

नमो हनुमते तुभ्यं नमो मारुतसूनवे ।
नमः श्रीरामभक्ताय श्यामास्याय च ते नमः ।। १

*ஹனுமானுன உமக்கு வந்தனம் வாயுகுமாரனுக்கு வந்தனம். ஸ்ரீ ராமபக்தனுக்கு வந்தனம். மேகவண்ண முகமுள்ளவருக்கு வந்தனம்.(1)*

नमो वानरवीराय सुग्रीवसख्यकारिणे ।
लङ्काविदाहनार्थाय हेलासागरतारिणे ।। २

*வானரவீரரும் ஸுக்ரீவனுடன் ராமனை நண்பராக இணைத்தவரும் லங்கையை எரிக்க விளையாட்டாகக் கடலைக்*

*கடந்தவருமான உமக்கு வந்தனம்.(2)*

सीताशोकविनाशाय राममुद्राधराय च ।
रावणान्तकुलच्छेदकारिणे ते नमो नमः ॥ ३

*ஸீதையின் துயரை அகற்றியவரும் ராமனின் அடையாள மோதிரத்தைத் தாங்கியவரும் ராவணன் ஈறுன அவனது வம்சத்தை வெட்டிச் சாய்த்தவருமான உமக்கு வந்தனம்.(3)*

मेघनादमखध्वंसकारिणे ते नमो नमः ।
अशोकवनविध्वंसकारिणे भयहारिणे ॥ ४

*இந்திரஜித்தின் வேள்வியைக் குலைத்தவரும், அசோகவனத்தை அழித்தவரும் பயத்தை நீக்குபவருமான உமக்கு வந்தனம்.(4)*

वायुपुत्राय वीराय आकाशोदरगामिने ।
वनपालशिरश्छेत्रे लङ्काप्रासादभञ्जिने ॥ ५

ज्वलत्कनकवर्णाय दीर्घलांगूलधारिणे ।
सौमित्रिजयदात्रे च रामदूताय ते नमः ॥ ६

*வாயுவின் குமாரரும், வீரரும் வானின் நடுவே செல்பவரும் லங்கைக் காட்டின் காவலனின் தலையை வெட்டியவரும் லங்கையின் மேன்மாடங்களை அழித்தவரும் பளபளக்கிற தங்கமேனியரும் நீண்ட வாலுள்ளவரும் லக்ஷ்மணனுக்கு வெற்றி தந்தவரும் ராமனின் தூதருமான உமக்கு வந்தனம்.(5-6)*

अक्षस्य वधकर्त्रे च ब्रह्मपाशनिवारिणे ।
लक्ष्मणाङ्गमहाशक्तिशस्त्रघातविनाशिने ॥ ७

रक्षोघ्नाय रिपुघ्नाय भूतघ्नाय च ते नमः ।
ऋक्षवानरवीरौघप्राणदाय नमो नमः ॥ ८

